## 96

# மதுரா விஜயம்

'கங்கா, எப்பேர்பட்ட சாம்ராஜ்யம் இந்த நிலைக்கு வந்துவிட்டது!' என்று சொல்லிக்கொண்டே வீரகம்பன உடையார் மதுரை பாண்டிய மன்னர்களின் அரண்மனை சங்கீத சாலையில் உட்கார்ந்தார்.

'ராஜ வம்சங்களுக்கும் மானிடர்களைப் போல ஆயுள் உண்டல்லவா? எந்த சாம்ராஜ்யம் நீண்டு நிலைத்து நின்றது, சொல்லுங்கள்!' என்று அவர் மனைவி கங்காதேவி பதில் சொல்லிக் கொண்டே இடத்தின் அழகைக் கண்டு திகைத்துக் கொண்டிருந்தாள்.

கம்பன உடையார் விஜயநகர சாம்ராஜ்யத்தின் சேனாதிபதியாகவும் பிரதிநிதியாகவும் தெற்கே வந்து சாம்ராஜ்யத்தின் ஆதிக்கத்தை ஸ்தாபித்தார். மதுரை முகம்மதியர்கள் கையில் விழாதபடி தடுக்கவே, முக்கியமாக அவர் அதைப் பாண்டிய மன்னரிடமிருந்து கைப்பற்றினார். பாண்டியனின் திருநெல்வேலிக்குப் போய்விட்டார். கம்பன உடையாரின் மனைவி கங்காதேவி வடமொழியில் சிறந்த தேர்ச்சி பெற்றவள். கணவன் திக்விஜயம் செய்தபோது கூடவே சென்றாள்.

'ஆனாலும், இந்தப் பாண்டிய வம்சத்தில் எத்தனை மகாபுருஷர்கள்! நெடுஞ்செழியன், அரிகேசரி மாறவர்மன், மாறவர்மன் ராஜஸிம்மன், ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன், மாறவர்மன் சுந்தர பாண்டியன், ஜடாவர்மன் குலசேகரன் – எந்த ராஜவம்சத்தில் இத்தனை சரித்திர தீரர்கள் இருந்திருக்கிறார்கள்!' என்று கம்பனன் அடங்காத ஆச்சரியத்துடன் மொழிந்தார்.

'நானும் இந்த அற்புதமான மாளிகையைச் சுற்றி வரும் பொழுது எண்ணிப் பார்த்தேன். எத்தனை புவன சுந்தரிகள் இந்த அந்தப்புரங்களில் நடமாடி, தங்கள் உன்னத அழகால் அரசர்கள் மனதைக் கவர்ந்து, மகிழ்ச்சியைக் கொடுத்தும், பெற்றும் இருப்பார்கள்! இந்த சௌந்தரிய மெல்லாம் இங்கே தான் புலர்ந்து கனிந்து கொட்டிப் போயிருக்கிறது! அதோ அதுதான்–'

*சக்தி, பொங்கல் மலர், ஜனவரி-1944*

'ராஜ மகிஷிகள் நீராடும் இடம்!'

'இது? என்று கங்காதேவி எதிரே தெரிந்த கட்டிடத்தைக் காட்டிக் கேட்டாள்.

'உல்லாஸ கிருகம்!'

'ஆகா, சிருங்கார லஹரியில் சிந்திய அந்தக் கட்டழகிகளின் சிரிப் பொலி இன்னும் இங்கே எதிரொலிப்பது போல எனக்குப் பிரமை தட்டுகிறது. இப்பாண்டிய நாட்டில் பெண்கள்தான் என்ன லாவண்யத் துடன் துலங்குகிறார்கள்!'

கட்டுக்கொண்டையும் சுட்டும் விழியும் ஒட்டும் சேலையுமாக தேவ மகளிர் போல இருக்கிறார்கள். என்ன உடல்கட்டு, ஆரோக்கியம், காம்பீரியம்! வீரனை மணந்து வீரம் ஈன்ற பாக்யசாலிகள் பாண்டிய அரசிகள். அவர்கள் வசித்து வாழ்க்கை இன்பத்தைப் பருகித் தீர்த்த இந்த இடத்தில் அவர்கள் இன்னும் இருப்பது போலவே இருக்கிறது.

'மார்பகம் விம்மிய மன்னர்கள் போரிலும் காதலிலும் ஈடுபட்டுத் திளைத்தார்கள். அத்தனை செய்கைகளும் அத்தனை உணர்ச்சிகளும் இன்று எங்கே?'

'ஏன், செய்கைகள் இன்று மறையவில்லை. உணர்ச்சிகள் –ஆ, அவற்றை எப்படி நிலைநிறுத்தி இருக்கக்கூடும்? கவிகளல்லவா–அந்த வேலையைச் செய்ய வேண்டும்!'

'சிற்பகமும் செய்வார்களாம். இந்த நாட்டில் செய்திருக்கிறார்கள்!'

'இந்த மகத்தான சாம்ராஜ்யத்தின் சரித்திரத்திலிருந்து நமக்கே ஓர் அறிவும் தெளிவும் ஏற்படுகின்றன! மனிதன் எவ்வளவு பெரியவனாக இருந்தாலும், எவ்வளவு செயல்கள் புரிந்தவனானாலும் சாசுவதமாக மாட்டான். செயல்களில் சில சாசுவதமாகின்றன!'

அதே போல் கங்கா, என் வெற்றிகளின் பலன் பரம்பரையாக நீடிக்கும்! நான் நீடிக்க மாட்டேன். நீ எழுதிவரும் காவியம் நீடிக்கும்!'

'நான் ஆவல் கொண்ட அளவில் அந்தக் காவியத்தைப் பூர்த்திசெய்ய முடியவில்லை. பேராசை கொண்டு மகாகவி காளிதாசன் பாதையைப் பின்பற்றி மதுராவிஜய காவியத்தைத் தொடங்கினேன். ஆனால் அதில் முற்றிலும் சென்று மகாகாவியம் ஒன்றைச் சிருஷ்டிக்க எனக்குச் சக்தி இல்லை'.

'மகா காவியத்திற்கேற்ற பாத்திரமாக நான் அமையவில்லை – நீ என்னைத் தேர்ந்தெடுத்தது பிசகு. அவ்வளவுதான். உன் சக்தியில் குறைவு இல்லை'.

'இல்லை, இல்லை! இந்த மாளிகையில் இப்பொழுது என் மனதில் தோன்றும் கற்பனைகளையெல்லாம் அதில் புனைய என்னால் முடியாது. வேகவதிக் கரையில் வேரூன்றினது போல அமைந்த இந்த சாம்ராஜ்யம் என்ற ஆலவிருக்ஷம் சாய்ந்து விட்டது. என்ன காட்சி! எப்பேர்ப்பட்ட

அற்புத ரஸத்தைக் கிளப்பும் விஷயம்! அதை விவரிக்க என்னால் முடியவில்லை. என் காவியம் மதுரா விஜயத்தை மட்டிலும்தான் குறிக்கிறது'.

'கங்கா, உன் சக்தி உனக்குத் தெரியவில்லை. மதுரையின் மண்ணில் ஊரிக்கிடக்கும் வளப்பம் இந்த மாளிகையில் வாசனை கட்டினது போலக் கட்டிப் போய்விட்ட நவரஸச் சிறப்பு – இவை உன்னைத் திணற வடிக்கின்றன. சாவகாசமாக, துங்கைக் கரையில், உன் மாளிகையில் எண்ணிப் பார்க்கும்பொழுது இந்தக் கனவு உன் வாக்கில் அகப்படும்!'

'அகப்படாது! அதை அறைகுறையாக சித்தரிக்கவும் நான் துணிய மாட்டேன். ஆகையால், இந்த சாம்ராஜ்யத்தின் காவியம் எழுதப்படாத காவியமாகத்தான் துலங்கவேண்டும் என்றாள் கங்காதேவி'.

●